முதற் பதிப்பு
1995

இந்த புத்தகம் திருமலை திருப்பதி தேவஸ்தானம் நிதி உதவியோடு பிரசுரிக்கப்பட்டுள்ளது

**This book has been published with the financial assistance from Tirumala Tirupathi Devastanams**

*Designed and Typeset by*
**THE MAC PRINTS**
No.4 Friends Enclave
Collectors Office Road
Cantonment - Trichy - 620 001
Phone: 464672

# ஸ்ரீ தியாகப்ரும்மம்

நிதி சால சுகமா
ராமுனி



ஸன்னிதி ஸேவ
சுகமா

ராம நாமம் தாரக
மந்திரம்

ஸ்ரீரங்கநாதர் துணை

# முகவுரை

'கஸ்தூரி கலிதோர்த்வ புண்ட்ர திலகம் கர்ணாந்த லோலேக்ஷணம்

முக்தஸ் மேரமநோ ஹராதர தலம் முக்தா கிரீ டோஜ்ஜ்வலம்

பச்யன் மானஸ பச்யதோ ஹரருசிம் பர்யாய பங்கேருஹம்

ஸ்ரீரங்காதிபதே: கதாநுவதநம் ஸேவேய பூயோப்யஹம்'

'பச்சைமாமலை போல் மேனி பவளவாய் கமலச்செங்கண் அச்சுதா அமரரேரே ஆயர்தம் கொழுந்தே

இச்சுவைதவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவைபெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானேன்

என்ற அழகிய மணவாளனின் ஸ்தோத்திரம், பாசுரம் கூறி ஸ்லோகத்திற்கு உகப்ப ராமன் ஆராதித்த அழகிய மணவாளப்பெருமாளை 'ராஜுவெடல ஜூதாமுராரே' என்று பாடிய ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் கீர்த்தனையை இப்புத்தகத்தில் கண்டு ரஸித்தேன். இது ஸ்ரீரங்கப் பஞ்சரத்ன கீர்த்தனைகளில் ஒன்றாகும். மிக உன்னதமான இக்கீர்த்தனை மூலம் நாம் அழகிய மணவாளப்பெருமாளை ஸேவிக்க முடிகிறது. மேலும் இப்புத்தகத்தில் பஞ்சரத்ன கீர்த்தனைகள் ஐந்தும், முத்துக்களைக் கோர்த்தெடுத்தார் போன்ற முக்கியமான 40 கீர்த்தனைகளை 157 பக்கங்களில் பிராசீன வழிகளோடு ஸ்வர ஸாகித்திய குறிப்புகளை ராக, தாள, பாவ, லய வழிகளோடு விவரமாகத் தந்து இறைவனை இசை மூலம் பக்தி செய்து உயர்வடையலாம் என்று வடிவமைத்துள்ளது. இளம் தலைமுறையினருக்கு பயனுள்ளதாகும். ஸ்ரீத்யாகப்ரும்ம சிஷ்யப் பரம்பரையில் வந்த திருமதி ஜெயம்மாள் தனது மாணவியான A. சூடாமணியை பணித்து, இப்புத்தக வெளியீடு செய்வித்து உருவாக்கிய பெருமை ஜெயம்மாளுக்கு கிடைக்க அரங்கனை பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்
ஸ்ரீரங்க நாராயண ஜீயர்

உ

# ஸ்ரீராம ஜெயம்

## முன்னுரை

ஸ்ரீ த்யாகப்பிரும்ம சிஷ்ய பரம்பரையில் வந்த உமையாள்புரம் திரு ஸ்வாமிநாத அய்யரிடம் எனது தாயார் கும்கோணம் திருமதி ஜெயம்மாள் அவர்கள் சங்கீதப் பயிற்சியை 5 ஆண்டு காலம், அதில் 2 வருடம் வாய்பாட்டும், 3 வருடம் வீணை இசையுமாக பயின்றார். இவருக்கு திருஸ்வாமி நாதய்யர் நிறைய ஸ்ரீத்யாக ராஜ கீர்த்தனைகளை, (அவர் தனது குரு குலத்தில் பயின்றவைகளை) எனது தாயாருக்கு போதித்திருந்தார். இதைத் தவிர தீட்க்ஷதா ஸ்யாமா சாஸ்திரி க்ருதிகள், கோபாலக்ருஷ்ண பாரதியார் பாடல்களில் நந்தனார் சரித்திரகீர்த்தனைகள், இராமாயணப் பாடல்கள், புரந்தரதாஸர் கீர்த்தனைகள், தேவாரம், திருவாசகப் பாடல்கள், காவடிசிந்து, நொண்டிசிந்து கற்று தந்திருக்கிறார். எனது தாயார் கற்றிருந்த ஸ்ரீத்யாகப் பிரும்ம கீர்த்தனைகள் ஏராளம். தற்போது நடைமுறையில் பாடாதுயிருந்து பாடி பிரஸித்தியாகும் கீர்த்தனைகள் கூட என் தாயாருக்கு பாடாந்தரமாகியிருந்தது. அவரது குரு திரு ஸ்வாமிநாத அய்யரால் என்றால் மிகையாகாது. அவர் ஸ்ரீத்யாக பிரும்மத்தின் அடுத்தடுத்த சிஷ்ய பரம்பரை ஆவார்.— ஸ்ரீத்யாகப் பிரும்மம், மஹாவைத்யநாதய்யர் உமையாள்புரம் ஸ்வாமிநாதய்யர் ஆகும். ஆதலால் உமையாள்புரம் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யர் ஸ்ரீ த்யாகப் பிரும்ம கீர்த்தனைகளில் அனேகத்தை எனது தாயாருக்கு போதித்திருந்தது அதிர்ஷ்டவசமே. நான் சிறு வயது முதற்கொண்டே எனது 9 வயது முதற்கொண்டு 21 வருட குருகுலம் பயின்றேன். எனக்கும் ஸ்ரீத்யாகப் பிரும்ம கீர்த்தனைகள் நிறைய பாடாந்தரம் ஆகி உள்ளது. மேலும் ஸ்ரீ தீட்க்ஷதர், ஸ்ரீ ஸ்யாமா சாஸ்திரிகள், ஸ்ரீ ஊத்துக்காடு வேங்கட சுப்பய்யர் ஆகிய பெரியோர்களின் ஸாகித்யமும் ஏராளமாக பாடாந்தரமாகி உள்ளது. கோபாலக்ருஷ்ண பாரதியார், புரந்தரதாஸர், இராமயணப்பாடல், பாரதியார் பாடல்கள் பாபநாசம் சிவன் பாடல்கள், திவ்யப் பிரபந்தம் இவை அனைத்தும் எனக்கு போதித்துள்ளார். 1962லிருந்து 1975வரை பல இடங்களில் இன்னிசை கச்சேரியை எனது சகோதரிகள் குமாரி மைதிலி, பிரேமா, விஜயா இவர்களுடன் பாடியிருக்கிறேன். வீணைக் கச்சேரியும் செய்துள்ளோம். மேலும் 1960 முதல் இன்று வரை திருமதி ஜெயம்மாள் அவர்கள் திருவரங்கத்தில் வீணை இசை பயிற்சியும் வாய்பாட்டும் கற்று தந்துகொண்டிருக்கிறார்கள். அவருக்கு வயதானபடியால் தற்போது அந்த வகுப்புகளை நானே நடத்தி வருகிறேன். மேலும் எனது சகோதரி திருமதி விஜயலக்ஷ்மி நரஸிம்மன் சென்னை மாம்பலத்தில் வீணை வகுப்பை நடத்தி வருகிறார். எனது அண்ணியார் திருமதி ஸ்ரீமதிதுரைசாமி அவர்கள் சங்கீதத்தில் கல்லூரி பட்டம் பெற்றவர். அவரும் தனது 9 வயதிலிருந்து கர்நாடகத்தில் பல இடங்களில் இசை கச்சேரி செய்துபெயர் பெற்றவர். அவருடைய பாடாந்தர வழிபாடும், எனது வழிபாடுகளும் ஏறக்குறைய ஒன்றாகவே அமைந்தது அதிர்ஷ்டவசமே. அவரும் எனக்கு நிறைய தியாகப் பிரும்ம கீர்த்தனைகளை (எனது வகுப்பில் சேர்ந்து நடத்தினதை) தந்திருக்கிறார். அவருக்கும் ஏராளமான ஸ்ரீத்யாக பிரும்ம கீர்த்தனைகளும், ஸ்ரீபுரந்தரதாஸர், ஸ்ரீஸ்யாமா சாஸ்திரிகள், ஸ்ரீஊத்துக்காடு வேங்கடசுப்பய்யர் கிருதிகளும், ஸ்ரீதீட்க்ஷிதர் கீர்த்தனைகளும் பாடாந்தரம் ஆகி உள்ளது. அவை அனைத்துமே என் வழி சங்கதி போலவே அவரும் பாடியதால், என்னுடன் சேர்ந்து வகுப்புகளை நடத்தியுள்ளார். மேலும் எனது குடும்பத்தில் வந்த மருமகள்கள் ஏனை யோரும் சங்கீதக் கலைஞர்களாகவே அடைந்தது எங்களது முற்பிறவி பயனே. எனது தாய் கற்றுத் தந்த அனைத்து கீர்த்தனைகளையும் பிராசீன வழியோடும், ஸ்வரக் குறிப்போடும், பலரும் பயன் அடைய எண்ணி புத்தக வடிவாக்கி உள்ளேன். இன்றைய இளம் தளிர்கள் ஸ்ரீ த்யாகப் பிரும்ம கீர்த்தனைகளின் பழைமையான வழிகள் மறவாதுயிருக்கவும், இசை பயிலுவதற்கு தக்கபடி கர்நாடக இசை குறிப்பு, ராகப்ரஸ்தார விளக்கம், முதலியனவைகளையும் புத்தகத்தில் சேர்த்துள்ளேன். மேலும் இப்புத்தகம் உருவாகுவதற்கு நான் கற்ற குரு குலமே காரணம் என்பதை பெருமையுடன் கூறிக் கொள்கிறேன். சிறு வயது முதற்கொண்டு சங்கீதத்தோடு ஒன்றி விட்ட எனக்கு சற்று பொருள் சிரமம் ஏற்பட்டாலும், அதனை பொருட் படுத்தாது என்னைப் போல் ஏனைய மாணவ மாணவிகள் பயனுற இப்புத்தக வெளியீட்டினை செய்கிறேன். ஸ்ரீத்யாகராஜ க்ருதிமாலா முதற் பதிப்பு இதுவே இன்னும் பல பாகங்கள் வெளியிட உத்தேசித்துள்ள என் கனவு பலிக்க எனது குரு பரம்பரையை நமஸ்கரித்துக் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்
A. சூடாமணி

## ஸ்ரீமத்வேங்கடேசாய நம :

## நூலாசிரியை உரை

ஸங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீத்யாகப் பிரும்மம் சிஷ்ய பரம்பரையில் வந்தவர் எனது தாயாரான திருமதி ஜெயம்மாள் அவர்கள். இவர் தம் இளம பிராயத்திலேயே ஸங்கீதத்தை முறையாக பயின்றவர். இவருடைய தந்தை திரு. T.R. அனந்தாச்சாரியார் சங்கீதத்தில் மிக்க ஆர்வம் கொண்டவர். ஸ்ரீ சகாராம ராவ் கோட்டு வாத்யம், பிடில் ஸ்ரீ ராஜ மாணிக்கம்பிள்ளை. இவர்களுடைய வாத்யக் கச்சேரிகளை அடிக்கடி கேட்பதும், ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார், ஸ்ரீ மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர், மற்றும் பலருடைய இசைக் கச்சேரிகளை வாணிவிலாஸ் ஸபையில் ஏற்பாடு செய்து அடிக்கடி கேட்பதுண்டு. வாணிவிலாஸ் ஸபை ஸ்தாபகரும், நிர்வாகஸ்தருமாகயிருந்த இவர் கர்நாடக சங்கீதத்தை வளர்க்க மிகவும் பாடுபட்டவர் ஆவர். இவர் தன்னுடைய மகளையும் இசை மேதை ஆக்க எண்ணி இளம் பிராயத்திலேயே இசைப் பயிற்சியை அச்சமயம் பிரபல வித்வானாகத் திகழ்ந்த சங்கீத கலாநிதி உமையாள்புரம் திரு ஸ்வாமிநாதய்யரிடம் பயிற்சி பெறவைத்தார். திருமதி ஜெயம்மாள் அவர்கள் தன்னுடைய 7ம் வயதில் துவங்கி, 5 ஆண்டு காலத்தில், 2 ஆண்டு வாய்ப்பாட்டும் 3 ஆண்டுகள் வீணைப் பயிற்சியும் பெற்றார். ஸ்ரீத்யாக பிரும்மத்தின் சிஷ்ய பரம்பரையில் வந்த உமையாள்புரம் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யர் தன் குரு பரம்பரையின் அரும் பெரும் கீர்த்தனைகளை பீராசீன முறையோடு கற்பித்தார். அவரிடம் கற்ற அவ்வளவு கீர்த்தனைகளையும் பல ஆண்டுகள் தன் மனத்துள் மறவாது வைத்திருந்து, காப்பாற்றி, எனக்கும் எனது சகோதர சகோதரிகளுக்கும் இன்னும் பல மாணவ மாணவிகளுக்கும், சிட்கைஷ அளித்தார். இவரிடம் 30 ஆண்டுகளாக பல மாணவ மாணவிகள் வீணை, வாய்பாட்டு இசையை பயின்றார்கள். கல்லூரி மாணவிகளுக்கும் இசையை சிறப்பு பாடமாக கொண்டவர்களுக்கும், போதித்துள்ளார். இவர் கற்ற ஸ்ரீத்யாகப் பிரும்ம கீர்த்தனைகள் அவ்வளவையும், அவரிடம் குருகுலம் பயின்று மனனம் செய்துள்ள நான் புத்தக வடிவாக அமைத்து விட வேண்டும் என ஆர்வம் கொண்டு துவக்கியுள்ளேன். தற்போது பிராசீன வழிமுறைகள் மெல்ல மெல்ல மறைந்து வரும் நம் கர்நாடக இசையை வேறூன்ற நினைத்தும், வளரும் கலைஞர்கள் இளம் சிட்டுக்கள் கர்நாடக இசையில் முன்னுக்கு வரவும், அவர்களுக்கு பயன்படும் வண்ணம் என் தாய் பேணி காத்து வந்த பொக்கிஷமான கீர்த்தனைகளை வெளியிட்டுள்ளேன். எனது தாயிடமே குருகுலமாக பயின்ற நான், அவர் பாடிகாண்பித்த வழியிலேயே அனைத்து சங்கதிகளையும் மறவாது எழுதி இந்த முதற் பதிப்பை வெளியிட்டு பூர்த்தி செய்துள்ளேன். என் தாய்க்கு அவர் குருநாதர் சொன்னபடி, எனக்கு என் குரு சொன்ன கீர்த்தனைகளை எழுதியுள்ளேன். ஸ்ரீத்யாகப் பிரும்ம கீர்த்தனை தெலுங்கு கீர்த்தனையாதலால் பாடாந்தரம்படி எழுதியிருந்ததில் ஏதேனும் சொற்குற்றம், இருப்பினும் பிழைநீக்கி ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். இப்புத்தகத்திலுள்ள கீர்த்தனைகளுக்கு எனக்கு சொன்ன அர்த்தத்தையும் பொதுவாக தொகுத்து அளித்துள்ளேன். அதிலும் ஏதேனும் குற்றம்குறை இருப்பின் பிழை நீக்கி பெருநிறை வோடு ஏற்றுக் கொள்ள பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். எனது முதல் வெளியீடானது "பாசுரமாலா" என்ற புத்தகம். பல பாசுரங்களுக்கு (நாலாயிரத்ததிவ்யப் பிரபந்தத்திலிருந்து) கர்நாடக இசைக்குறிய ராகத்தில் ஸ்வரப்படுத்தி ராக தாளத்துடன் வெளியிடப்பட்டது. எனது இரண்டாம் வெளியீடு "ஸ்ரீ த்யாக ராஜ க்ருதிமாலா" வாகும். இது போல் இன்னும் பல வெளியீடு செய்ய உத்தேசித்துள்ளேன். ஸ்ரீ ராம நாமத்தை ஜபித்து, நா தோ பாஸனை செய்து ஏனையோரை எளிய முறையில் வணங்கச் செய்யும் க்ரந்தத்தை அளித்த குரு பரம்பரையான ஸ்ரீ த்யாகப் பிரும்மத்திற்கு அஞ்சலி செலுத்துகிறேன். எனது குருவான என் தாய்க்கும் நமஸ்கரித்து, குருகாணிக்கையாக இப்புத்தத்தின் நூலாசிரியை உரையை முடிக்கிறேன்.

இங்ஙனம்

A. சூடாமணி

ஸ்ரீ:

# ஸ்ரீ த்யாகப்ருஹ்மம்

## ஸ்ரீ மஹாவைத்யநாதய்யர்

## உமையாள்புரம் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யர்

## கும்பகோணம் திருமதி ஜெயம்மாள்



ஜெயம்மாள் சிஷ்யைகள் :

**A. சூடாமணி, N. விஜயலக்ஷ்மி நரஸிம்மன்**

மற்றும் **மாணவி மாணவர்கள்**

# ஸ்ரீ த்யாகப்ருமமம

ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகள் கலிவருஷம் 4868, சாலிவாகன வருஷம் 1689க்கு சரியான ஸர்வஜித்து வருஷம் சித்திரை மாதம் 25ம் தேதி திங்கட்கிழமை வைசாக சுத்தஸப்தமி பூச நக்ஷத்திரம் சூரிய உதயாதி 15 1/2 நாழிகை கடக லக்னத்தில் (04.05.1767)ல் அவதரித்தார். இவர் முன்னோர் கர்னூல் மாவட்டத்தில் காகர்ல வம்ஸத்தின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். மஹா ராஷ்டிரர்கள் காலத்தில் தஞ்சாவூரில் குடியேறினார்கள். பாட்டனார் கிரிராஜ கவி ஷஹாஜி அரசர் காலத்தில் ஸமஸ்தான வித்வானாகத் திகழ்ந்தவர். ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் தந்தை ராமப்ரும்மம் என்பவர். பாரத்வாஜ கோதிரம் ஆபஸ் தம்ப ஸூத்ரம். கல்வி கேள்வியில் சிறந்தவர். புராண ப்ரவசனத்தில் வல்லுனர். ஆகவே இவரது குமாரரான ஸ்ரீத்யாகராஜரை இளம் பிராயத்திலிருந்தே ஸ்ரீமத்ராமாயணம் பாகவதம், பகவத்கீதை முதலான நூல்களை கற்றுணரச் செய்தார். திருவையாற்றில் குடியேறினபின் ராமப்ரும்மம் த்யாகராஜருக்கு 8 வயதில் உபநயனம் செய்து வைத்தார். 8 வயதிலேயே ஸ்ரீத்யாகராஜர் ஜய தேவர் அஷ்டபதிகள், நாராயண தீர்த்தர் தரங்கங்கள், புரந்தரதாஸர் க்ருதிகள், பதங்கள் அன்னமாச்சாரியார் க்ருதிகள், பத்ராஜலராமதாஸர் கீர்த்தனைகளை கற்றுணர்ந்து பின் தெலுங்கு ஸமஸ்க்ருதத்தில் பல கீர்த்தனைகளை புனைய ஆரம்பித்தார். இவரது 14லாவது வயதில் தாய்தந்தையர் காலமானார்கள். இதற்குள்ளே கிரமாந்தம் அத்யயனம், காவிய நாடகாலங்கார வித்பத்தியு மடைந்தார். பின் ஸங்கீதத்தை அவர் வீதியிலேயே வசித்து வந்த அரண்மனை வித்வானாகிய ஸொண்டி வெங்கட ரமணய்யாவிடம் ஸங்கீதம் அப்யஸித்து ஏகஸந்தக் கிராஹியாய் ஒரு ஆண்டுக்குள்ளே ஸங்கீத லக்ஷணங்கள், ராக ஆலாபனம் தாளம் முதலிய ஸங்கீத விஷயங்களில் இவருக்கு நிகர் வேறில்லை என்று கற்றுணர்ந்தார். எளிய வாழ்க்கையை மேற்கொண்ட ஸ்ரீத்யாகப்ரும்மம் உஞ்ச விருத்தி செய்து வாழ்ந்தார். இவருக்கு 18 வயது நிறைவதற்குள் ஸ்ரீராமக்ருஷ்ணயதீந்த்ரரால் ஸ்ரீராம நாமதாரக மந்த்ரம் உபதேசிக்கப்பட்டு 96 கோடி ராம நாமம் ஸேவித்துபின் ஸ்ரீராமனை நேராகவும், ஸ்வப்னத்திலும் தரிசித்தார். 100 கோடி ராம நாமம் ஜபம் செய்பவர் ஜீவன் முக்தர்கள் ஆவார்கள் என்றும் முன்னோர்கள் வாக்குப்படி அவர் ஜபித்தவுடன் ராமனை தரிசித்தார். புளகாகித மடைந்தார். தன்னுடைய அந்த அனுபவங்களை 'ஏல நீதயராது' என்னும் கீர்த்தனம் பாடினார். எப்படி வால்மீகி முனிவருக்கு நாரதர் ஸ்ரீமத்ராமாயணத்தை உபதேசித்தாரோ, அப்படியே வால்மீகியின் அம்சமாகத் தோன்றிய ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு இசை ஞானத்தை அருள ஸந்யாசி வடிவில் வந்து ஸ்வரார்ணவம், நாரதீயம் என்ற நூல்களை அளித்து அருளி மறைந்தார். இதன் பிறகு சங்கீத இலக்கண இலக்கிய நடையுடன் ராக, தாள, பாவ, லயத்தோடு க்ருதிகளை விசேஷமான அம்ஸத்தோடு அமைத்தார். ஆகவே நாரதருக்கு நன்றி அளிக்கும் வகையில் ஸ்ரீநாரத, நாரத குருஸ்வாமி, வரநாரத, என்று போற்றிப் பாடினார். தினந்தோரும் காலையில் நித்யானு கர்மானுஷ்டானங்களை முடித்து ராமருக்கு விசேஷ அபிஷேக ஆராதனை செய்து பின் உஞ்சி வ்ருத்தியை சிஷ்யர்களோடு சென்று திரவியங்களை சேகரித்து, பெருமானுக்கு நைவேதியம் செய்து பிற்பகல் பிரவசனம் செய்தும், தினம் தினம் புதுபுதுக் கீர்த்தனம் புனைந்து அதனை இரவு வேளையில் பஜனையில் வீணையோடு சீடர்களுடன் பாடுவது வழக்கமாயிருந்தது. சீடர்களுக்கும் வீணையோடு வாய்பாட்டிசையை சேர்ந்து பாடினதால், அவர்களுக்கு கீர்த்தனைகள் நன்கு உணர்ந்து பாட முடிந்தது. அதுவே இக்காலம் வரை அழியாமல் இருந்ததற்கு காரணம், ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை இசையோடு க்ருதிகளை மாணாக்கர்களுக்கு போதித்ததே எனலாம். [இதனை இந்த முக்கியமான விவரத்தை எனது தாயார் திருமதி ஜெயம்மாள் எனக்கு குருகுலத்தில் போதித்திருந்தார்.] [ஜெயம்மாள் சங்கீத குருகுலத்திலும் வீணை, வாய்பாட்டு சேர்ந்தே நடத்தப்படுகிறது என்பதற்கு இதுவே காரணம்.] இவர் நிறைய தல யாத்திரையை மேற்கொண்டு அந்த அந்த தலத்தைப் பற்றி க்ருதி அமைத்துள்ளார். காஞ்சி வரதராஜ பெருமாளை- வரதராஜ, விநதாஸுத என்னும் க்ருதிகளையும் காஞ்சி காமாட்க்ஷியை விநயகுனி என்ற க்ருதியையும், திருப்பதி சென்று வேங்கடேச பெருமாளை, வெங்கடேச, தெரதீயகராதா, என்ற க்ருதிகளையும் ஒரு பக்தனை உயிர்பிக்க நாஜீவாதார என்ற கீர்த்தனையையும், திருவொற்றியூர் வந்து த்ருபுரஸுந்தரி மேல் ஐந்து கீர்த்தனைகளையும் பாடினார், அதில் முக்யமான க்ருதி 'தாரினி தெலுஸு கொண்டி', பின் கோவூர் வந்து சுந்தரேச பெருமானை ஐந்து கீர்த்தனங்களை பாடினார். இப்படியாக ஊர் ஊராக செல்லும் போது ஓர் இடத்தில் கள்வர்கள் வழி மறைத்ததாகவும், கற்களை வீசியதாகவும்

அப்பொது ஸ்வாமிகள் பல்லக்கில் இருந்த முந்துவெனுக என்ற தர்பார் க்ருதியால் பாடி லெண்ட ராமலக்ஷ்மண வில்லும் அம்போடும் தோன்றி அக்கள்வர்களை திருத்தியதில் அவர்கள் உபதேசம் பெற்றார்கள் என்று சரித்ரம் கூறுகிறது. பின் லால்குடி, ஸ்ரீரங்கம் வந்து ஸ்ரீரங்க பெருமானை ஐந்து கீர்த்தனைகளை பாடி பரவசமடைந்ததாகவும் சரித்ரம் கூறுகிறது. த்யாகராஜருடைய புத்திரி கலியாணத்திற்கு சிஷ்யரான வெங்கடரமண பாகவதர் கோதண்டராமர் படத்தை பரிசாக கொடுத்த மனம் கவர்ந்த அந்த பெருமானை 'நன்னுபாலிம்ப' என்ற மோஹன க்ருதி பாடியதாக கூறப்படுகிறது. ஸரபோஜி மன்னன் அரசவைக்கு வரவழைத்து தன் பெயரில் பாடல் புனைய வேண்டியதை த்யாகராஜர் அவர் தரும் ஸன்மானம் வேண்டாம் ராமனின் ஸன்னிதி ஸேவையே போதும் என்று அரசவை செல்லாமல் 'நிதிசால சுகமா' என்ற கீர்த்தனையை புனைந்தது வரலாறு சிறப்புடையதாயிற்று. ஒரு சமயம் (ராமர், சீதை, ஹனுமான்) த்யாகப்ரும்மம் வீட்டிற்கு வந்து த்யாகராஜருக்கு உண்ணாது இருக்க நேரிட்டபோது, சீதை கையால் சமைத்து, ஆஞ்சனேயன் கைங்கர்யம் செய்ய ராமபிரானோடு உணவு உண்டதை பின்னால் தெரிந்தபோது மனசந்தோஷத்தோடு ' பவனுத' என்னும் மோஹன பாடலை பாடினார் என்கிறது அவர் வரலாற்று குறிப்பு. ஆனந்த பைரவியை நிறைய பாடாமல் ஒரு அன்பரின் வேண்டுதலுக்காக விட்டு கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. இவரை காண வந்த மேதைகள் அனேகர் எனலாம். அவர்களில் கோவிந்தபட்டாசாரியார் என்ற ஹிந்துஸ்தானி சங்கீத வித்வான் காண வந்தபோது 'தாசரதே நீருணமு' என்ற தோடி ராக பாடல் பாடினதாகவும், திருவையாறு வந்தவுடன் ஷட் காலமாரார். த்யாகராஜருடைய ஏகாதசி பஜனையில் சந்தன சர்ஜித என்ற ஜயதேவர் அஷ்டபதியை ஆறு காலங்களில் பாட ஸ்ரீத்யாகப்ரும்மம் எந்த ரோமஹானு பாவுலு என்ற பஞ்சரத்னகீர்த்தனங்களின் கடைசீ பஞ்சரத்னத்தை மாராரும் வியந்ததாக கூறப்படுகிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம் தோற்றத்தில் ஸாதுவாகவும் எல்லோரையும் வசீகரிக்கும் முகபாவத்தை உடையவராகவும், ஒளி வீசும் கண்களை உடையவராகவும், துளஸி மணிமாலை அணிந்து உயரமான தோற்றம் கொண்டவராக இருந்தார் என்றும் கூறப்படுகிறது. இவருக்கு அநேக சீடர்கள் இருந்தார்கள் என்றும் அவர்கள் தஞ்சாவூர் ராமாராவ், தில்லைஸ்தானம் ராமய்யங்கார், வீணை குப்பைய்யர், வாலாஜாபேட்டை வெங்கடரமண பாகவதர், மானம்பூசாவடி வெங்கட சுப்பைய்யர் என்ற குறிப்பு உள்ளது. ஸ்ரீத்யாகராஜர் நாதயோகியாக திகழ்ந்தார் என்பதற்கு மோக்ஷமு கலதா, நாதலோலுடை, நாதோபாஸனு பாடியதிலிருந்து தெரிகிறது. இவருக்கு வழிகாட்டியாக திகழ்ந்த முன்னோர்களுக்கு அஞ்சலியாக சிகரம் போன்ற பஞ்ரத்ன பாடல் பாடியது விசேஷமானதாகும். இவருடைய இசை திறனை போற்றும் க்ருதிகளை தொரகுனு, தாரினி தெலுஸு, மேளராக க்ருதிகள் (72 மேளத்திலும் பாடப்பட்டதாக கூறப்படுகிறது) அமைத்ததிலிருந்து இவர் நாதயோகி, நாதப்ரும்மம் என்று அழைக்கப்பட்டு சிறப்பிக்கப்பட்டார். பஞ்சரத்னம் ஐந்தும் பாடியதிலிருந்து இசைக்கு ஆதாரம் அமைத்துள்ளார் என்பதை தெள்ளத்தெளிவாக காட்டுகிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம் 2000க்கு மேற்பட்ட வர்ணங்கள் அமைத்திருந்தார் என்று வரலாற்று குறிப்பு கூறுகிறது. இவரது க்ருதிகள் நவரஸத்தை காட்டுவதாக அமைந்துள்ளது எனலாம். பல கருத்துக்களை எடுத்துக்கூறும்படி உள்ளது இவரது க்ருதிகள் எனலாம். நீதியை போதிப்பது, வந்தனம் கூறுவது, பக்தி மார்கம், ராமநாம மஹிமை, நவரஸம், முறையீடு, ஸக்யம், தாஸ்யம், ஆத்ம நிவேதனம், விண்ணப்பம் இப்படியாக பல கருத்துக்களை ஒரே பாடலில் கூட காணலாம். இவர் இயற்றிய ப்ரஹ்லாத பக்தி விஜயம், நௌகா சரித்ரம், கீர்த்தனைகளில் திவ்யநாமம், உத்ஸவசம்ப்ரதாயம், சிவ கீர்த்தனை, ப்ரஹ்லாத பக்தி விஜயம் நௌகா சரித்ரம் கீர்த்தனைகள் விசேஷமானதாக போற்றப்பட்டுள்ளது. இப்படிபட்ட மஹான் ஸ்ரீத்யாப்ரும்மம், நாதப்ரும்மம், நாதயோகி, இசை ஞானி என்று பெரும் பேர் பெற்று வாழ்ந்து கடைசியாக க்ரிபை நல என்ற கீர்த்தனையில் தனக்கும் ராமனுக்கும் நடந்த விஷயத்தை பாடி தெரிவித்துவிட்டு முடிவாக சியாமஸுந்தராங்க என்ற க்ருதி பாடி அவருக்கு நேரம் சமீபித்தது தெரியவே ' ஜானகி காந்தஸ்மரனே' என்று சொல்ல பக்த கோடிகள் 'ஜய ஜய ராம ராம' என்று சொல்ல அவர் உயிர் உடலை விட்டு பிரிந்தது. புண்ய திதியை 06.01.1847 புஷ்ய பகுள பஞ்சமியாக கொண்டாடப்படுகிறது. ஆகவே ராம நாம ஸங்கீதனம் செய்து குரு கடாக்ஷம் பெறுவோமாக. எனக்கு கூறியதை நான் உங்களுக்கு கூறியுள்ளேன். பிழை பொறுத்து எப்பக்கத்தில் குற்றம் இருப்பினும் அதை பொருட்படுத்தாது பெரு நிறைவோடு ஏற்க வேண்டுகிறேன்.

A. சூடாமணி

## சங்கீத விளக்க உரை

இசை மூலம் கடவுளை நேரிலேயே சந்திக்கலாம் என்ற சித்தாந்தப்படி முக்தியடைந்தவர்கள் ஸ்ரீ த்யாகப்ரும்மம், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ ஸ்யாமா சாஸ்திரிகள், ஸ்ரீ புரந்தரதாஸர் ஸ்ரீ ஊத்துக்காடு வேங்கடசுப்பய்யர் ஆவர். ஸ்ரீ த்யாகப்ரும்மம் நாதோபாஸனை செய்து ஸ்ரீ ராமனை தனது இஷ்டதெய்வமாக துதித்து மோக்ஷமடைந்தார். ஸ்ரீ ராமனை பாலகனுகவும் கல்யாணராமனாகவும், கோதண்டராமனாகவும், வீரபுருஷனாகவும், ராஜனாகவும், நல்ல இசைப்பிரியனாகவும், இனிய நண்பனாகவும், தன் நாயகனாகவும் பாவித்து அனுபவித்து அனேக கீர்த்தனங்களை செய்துள்ளார். இதைத்தவிர ராமனது ஸ்ருங்காரம் வீரம், பேச்சுவன்மை, அவன் உடை அழகு, நடை அழகு, ரகுகுல திலகனாதலால் வில்லின் திறமையழகு, அவனுடைய சௌந்தர்யமான திவ்ய ஸ்வரூப அழகையும் பாடி பரவசமடைந்திருக்கிறார். அத்தகைய கீர்த்தனைகள் ஏராளம், ஏராளம். எளிதில் பாடாந்தரம் செய்யக்கூடிய அளவில் வெகுலயமாக எளிய நடையில், ராக தாள பாவங்கொண்ட சங்கதிகளோடும் கூடிய ஸ்ரீ த்யாகப்பிரும்ம கீர்த்தனைகளை பலரும் ரசனையோடு பாடி மகிழ்வதை காணலாம். கீர்த்தனையில் வரும் சங்கதிகள் பாடல்கள் நன்கு அமைவதற்கான உத்திகள் எனலாம். ஸ்ரீ த்யாகப்பிரும்ம கீர்த்தனையில் ஒவ்வொரு சங்கதிக்கும் ஒவ்வொரு அர்த்தம் பொருந்தும்படி அமைத்துள்ளார். மேலும் பல விரிவான சங்கதிகளை கொண்டதாலேயே இவருடைய கீர்த்னைகள் ரசானுபாவமாக அமைந்துவிட்டதெனலாம். அதனாலேயே எவர் பாடினாலும் தெவிட்டாத இன்பமாக அவருடைய கீர்த்தனைகள் ஒலிக்கிறது. ஒவ்வொரு கீர்த்தனைக்கும் அர்த்தங்கள் வேறு. அந்த அர்த்தங்களை ஒவ்வொரு சங்கதிகளைக் கொண்டு அடுத்து அடுத்து தெரிவிக்கிறார். உதாரணமாக "குருலேகஎடுவண்டி" என்ற க்ருதியில் சத்குருவுக்கு பக்தியோடு பணிந்தால் உயர்வடையலாம் என்கிறார். சங்கதிகள் வேறுபடுவதால் இரண்டாவது வரியிலேயே அந்த விஷயத்தைப் பற்றி சற்று அழுத்தமாக புரியும்படி வருணிக்கப்பட்டிருக்கும். அதே மூன்றாம் சங்கதியில் எப்படி சாமதான பேத தண்டத்தால் எடுத்துச் சொன்னால் புரியும்படி இருக்கும் என்று கூறியிருப்பார். இப்படியாக ஒவ்வொரு கீர்த்தனையும் அமைந்திருக்கும். இவருடைய கீர்த்தனையில் ஒவ்வொரு சங்கதியும் பொன்னான சங்கதிகள். சங்கதி மூலமே ரஸானுபவத்தை தெளிவுபடுத்துவதில் "ஸ்ரீ த்யாகப்பிரும்ம கீர்த்தனை" என்று பெரும் பேறு பெற்றுவிட்டது. இம்மஹான் ஸ்ரீ ராமனின் திவ்யஸ்வரூபத்தை மங்களாஸாஸனம் செய்வித்து ஸேவிக்கிறார். பல இடங்களில் தன்னை அவருடைய பக்தன் என்கிறார். ப்ரியன் என்கிறார். தன் ஆன்மாவுக்கு அவனே அதிபதி என்கிறார். இனிய நண்பன் என்கிறார். அதிக சந்தோஷம் ஏற்படும்போது ஸ்ருங்காரரஸமாக "க்ருதி அமைத்த இந்த மஹான், துயர் வரும்போது தாளாமல் இறைந்து வேண்டுகிறார். இன்பம், அதிக சந்தோஷம், துன்பம் என்பது [ஸ்ரீ த்யாகப்பிரும்மத்திற்கு ஸ்ரீ ராமனை காணாததால் தவிர] அன்றி இவ்வுலக வாழ்க்கையில் ஏற்படும் இன்ப, துன்ப, சந்தோஷம் என்பது பற்றி அல்ல. அவர் இவ்வுலக வாழ்க்கையில் வாழ்ந்த ஒரு துறவி, ஞானி ஆவார். தான் ஸ்ரீ ராமனை இறைந்து கேட்டும், உரிமையோடு கேட்டும், சந்தோஷத்தோடு கேட்டதும் எல்லாம் ஸத்பக்திக்காகவே என்கிறார். இவர் பாடிய பாட்டுகளில் பல இவருடைய குருவிடம் நல்ல பெயரை பெற்றுத் தந்து இருக்கிறது. இவரது குருவின் எதிரில் "தொரகுனாபாடி சன்மானம் பெற்றிருக்கிறார். மேலும் ஸ்ரீ நாரதரை தன் குருவாக நினைத்து, ஸ்ரீ ராமநாமத்தை 96 கோடி பாராயணம் செய்தும், ஸ்ரீ நாரதரிடம் ஸ்வரார்ணவம் என்ற நூலை பெற்றும் அம்மஹானை தனக்களித்த அப்பொக்கிஷத்திற்காக நாரதகுருஸ்வாமி, வரநாரத, ஸ்ரீ நாரத, என்று கீர்த்தனங்களால் பாடி அஞ்சலி செலுத்தி உள்ளார்.

ஸ்ரீ த்யாகப்பிரும்மத்திற்கு என்று எந்த வாரிசும் இல்லாது போனாலும், ஏனைய சங்கீத பரம்பரை வாரிசுகளால் இவரது சங்கீதம் பாடப்பெற்று விட்டது. இதற்கு இவருடைய எளிய நடை பக்திரஸம் பொங்கும் கீர்த்தனையால் எனலாம். அவரது சந்ததிக்குப் பதிலாக இன்று நம்மிடை எஞ்சி நிற்பது அவருடைய கீர்த்தனைகளே ஆகும். இதனை அழிக்காது, பாதுகாத்து, பேணி வளர்த்து நமது இளம் தலைமுறையினருக்கு காத்து வைப்போமாக. ஸ்ரீ த்யாகப்பிரும்மத்திற்கு அனேக சிஷ்யர்கள் உண்டு. அதில் முக்கியமானது எனது குரு சிஷ்ய பரம்பரையும், என்னுடைய சக சிஷ்ய பரம்பரையும் ஆன ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களும் ஆவார். எனது குரு பரம்பரை ஸ்ரீ த்யாகப் பிரும்மம், மஹாவைத்யநாதய்யர், உமையாள்புரம் ஸ்வாமி

நாதய்யர், கும்பகோணம் ஜெயம்மாள், இவர்களுக்கு கடைசியானவர் நான், எனது சகோதரி. மற்றொரு குரு பரம்பரை ஸ்ரீ த்யாகப்பிரும்மம், மஹாவைத்ய நாதய்யர், ராமநாதபுரம் ஸ்ரீநிவாஸ அய்யங்கார் என்கிற பூச்சி அய்யங்கார், ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் ஆவார். இது தான் மற்றொரு குரு பரம்பரை ஆகும். ஸ்ரீ அரியக் குடிராமானுஜ அய்யங்காருக்கு முன்னிலையில் அவர் என்னை விரும்பி கேட்ட தோடி பாடலை ராஜுவெடல பாடி காண்பித்திருக்கிறேன். எங்களது குரு சிஷ்ய பரம்பரை ஈடு இணையில்லாதது என்ற பெயரையும் பெற்றிருக்கிறேன். இதைத்தவிர ஸ்ரீ த்யாகப்பிரும்மத்திற்கு தில்லை ஸ்தானம் ராமய்யங்கார், வாலாஜா பேட்டை வெங்கடரமணய்யர், இன்னும் பல சிஷ்யர்கள் உள்ளனர். ஸ்ரீ த்யாகப்பிரும்மம் அனேக கீர்த்தனைகளை பாடியுள்ளார். அவற்றில் பஞ்சரத்னம் கீர்த்தனைகள், திவ்யநாம கீர்த்தனைகள், உத்ஸவஸம்பரதாய கீர்த்தனைகள் சிறப்பானவை. ஸ்ரீ த்யாகப்பிரும்மம் நாதோபாஸனைக்காக, நாதோபாஸன, மானமுலேதா, மோக்ஷமுகலதா, இபேர்பட்ட உள்ளத்தை உருக்கக்கூடிய கீர்த்தனைகளை பாடியுள்ளார். ஸ்ரீ த்யாகப்பிரும்மம் கடைசியாக "கிரிபைநல" என பாடி தன் உள்ளத்தால் ஸ்ரீ ராமனை பார்த்தாகிவிட்டது. உடலால் இவ்வுயிர் நீத்து பரகதியடைந்து பார்க்கப்போகிறேன் என்று சொல்லாமல் சொல்லி கி.பி. 1847ம் ஆண்டு புஷ்யபகுள பஞ்சமி அன்று விடியற்காலையில் பஜனை கூட்டத்தில் இறைவனடி சேர்ந்தார். ஒவ்வொரு ஆண்டும் இதனையே திருவையாற்றில் புஷ்யபகுள பஞ்சமி அன்று உத்ஸவமாகக் கொண்டாடப்படுகிறது. ஸ்ரீ த்யாகப்பிரும்மத்தின் இன்னும் பல கீர்த்தனைகளில், ராராமாயிண்டிதாக, ராஜுவெடல, பாலகனகமய, தாரினி தெலுஸு கொண்டி, ராமநீஸமான, மானமுலேதா, கலிகியுண்டே, இப்பேற்பட்ட பாட்டுக்கள் உள்ளம் உருக்கக் கூடியதாக உள்ளது. இதனையே என்னுடைய "த்யாகராஜ க்ருதிமாலாவில்" சேர்த்து இன்னும் பல அரிய கீர்த்தனங்களோடும் வெளியிட்டுள்ளேன். நான் கொடுத்துள்ள ஆரோஹண, அவரோஹணத்தை நன்கு அப்யஸித்து, அடுத்து அதில் வரும் ஸ்வரப்ரஸ்தாரங்களை நன்கு மனதில் படிந்து, ராகத்தின் சாயல் பரிபூர்ணமாக வரும்படி பாடிப்பார்த்த பின் கீர்த்தனைகளை பாட முயல வேண்டும். கீர்த்தனைகளில் பல சங்கதிகள் உள்ளது. அதனையும் ஒவ்வொரு சங்கதியாகப் பாடி பழகிவிட்டு அடுத்த சங்கதி எப்படி மாறுபடுகிறது என்பதை நன்றாக மனதில் பழகிய பின் சாதகம் செய்வது முறை. எப்படியும் தானே பாடக்கூடிய வழியில் பயனுள்ளதாக அமைத்துக் கொடுத்திருக்கிறேன். இப்புத்தகத்தில், வழிமுறைகளை அதனைக்கொண்டு பாடி முன்னேறலாம். இது இம்மாதிரி புத்தகம் இவ்வளவு விளக்க உரையோடு வெளிவந்ததாகத் தெரியவில்லை. மேலும் கீர்த்தனைகளின் அர்த்தத்தை மனதில் நன்கு பதிந்து கொண்ட பிறகு, சங்கதிகளை பாடினால் பாட்டுக்கு ரஸானுபவமும் மெருகும் ஏறும். ரசனையோடு கூடிய இன்பம் கிடைக்கும். இக்கீர்த்தனைகளில் வரும் ஒவ்வொரு ராகமும், எந்த மேள வரிசையை சேர்ந்தது, எந்த கீர்த்தனை ஜன்யமாக உள்ளது என்பதை பார்த்துவிட்டு, மேளமானால் அதற்குறிய ஸ்வரங்களை பிரயோகிக்க வேண்டும். ஜன்யமானால், மேளராகத்திற்குறிய ஸ்வரங்களை பிரயோகித்து பாட வேண்டும். அப்படி ஜன்ய ராகத்தில் தாய்ராகத்தின் ஸ்வரம் வராது அன்னிய ஸ்வரம் வருமானால் அது பாஷாங்க ராகம் என்று தெரிந்து கொள்ள வேண்டும். மேலும் ஸ்ரீ த்யாகப் பிரும்ம கீர்த்தனையில் ஸ்வராக்ஷரம் பல இடங்களில் பிரயோகம் உள்ளதை காணவும். ஸ்வராக்ஷரம் என்பது ஸ்வரமும் ஸாகித்யமும் ஆரம்பஸ்வரம் ஆரம்ப எழுத்து அல்லது சாகித்யத்தின் முதல் எழுத்து ஒன்றாகவே இருக்கும். இதைத்தவிர பல சங்கதிகளை பாடிப் பழகுவதில், அதிலிருந்து ஆலாபிக்கும் திறனும் ஏற்படுகிறது என்பதை இளம் தலைமுறை மறந்துவிடலாகாது. ஒரு கீர்த்தனையை திரும்பத்திரும்ப பாடுவதால் பாட்டுக்கு ஜீவகளை ஏற்படுகிறது. மேலும் ஆரோஹண, அவரோஹணத்தை அப்யஸிப்பதால் ராகத்தின் பிராசீன வழி மனதில் படிகிறது. இனி ஸ்வர விளக்கத்தைப் பற்றி பார்ப்போம். ஸ்வரங்களில் ஸப்தஸ்வரம் ஆகும். இவை ஸட்ஜம், மூன்று ரிஷபம், மூன்றுகாந்தாரம், இரண்டு மத்யமம், மூன்று தைவதம், மூன்று நிஷாதம் ஸ்தாயிஸட்ஜம் ஆகும். தற்கால முறைப்படி இவற்றில் சதுஸ்ருதி ரிஷபத்திற்கும், சுத்த காந்தாரத்திற்கும் ஒரே ஸ்வரஸ்தானம். ஷட்ருதி ரிஷபத்திற்கும், ஸாதாரண காந்தாரத்திற்கும் ஒரே ஸ்வரஸ்தானம். சதுஸ்ருதி தைவதத்திற்கும், சுத்த நிஷாதத்திற்கும் ஒரே ஸ்வரஸ்தானம், ஷட்ஸ்ருதி தைவதத்திற்கும் கைசிக நிஷாதத்திற்கும் ஒரே ஸ்வரஸ்தானம். சுத்த மத்யமம், பிரதி மத்யமம், மூன்றாவது மத்யமும் உண்டு. பஞ்சமம் ஒன்று தைவதம் மூன்று, நிஷாதம் மூன்று, ஸ்தாயிஸட்ஜம் ஆகும்.

ஸ்வரங்களில் ப்ரக்ருதிஸ்வரம், விக்ருதிஸ்வரம் என்று உண்டு. இவற்றில் ப்ரக்ருதிஸ்வரத்திற்கு உதாரணம் : மாயாமாளவ கௌளம். விக்ருதிஸ்வரம் உதாரணம் : ஹேமவதி, ப்ரக்ருதிஸ்வரங்கள் : ச.ரி அம்கா. ச.ம.ப. ச.தை. கா நிஸ். விக்ருதிஸ்வரங்கள். ச.ரி.ஸாகா.பி.ம.ச.தை.கைநி.ஸ். மொத்தம் 72 மேளராகம் ஆகும். இதில் சுத்தமத்யமம் ராகம் 36. பிரதி மத்யமம் ராகம் 36. இப்புத்தகத்தில் 72 மேளராக வரிசைகளிலிருந்தும் பாடல்கள் உள்ளது. ராகங்களின் பிரஸ்தாரக் கிரமம் : ராகங்களில் ஜனக, ஜன்யம் என்று இரண்டு பிரிவு உள்ளது. இதில் ஜனக ராகத்திற்கு மேளகர்த்தாராகம், கர்த்தா ராகம், தாய் ராகம், ஸம்பூர்ணம் என்ற பெயர்கள் உண்டு. ஜனகராகத்திற்கு ஸப்தஸ்வரமாகிய ஏழு ஸ்வரங்களும் வரும். ஆரோஹண், அவரோஹணத்தில் ஸ்வரங்கள் வரிசையாக வரும். பூர்ண, ஸம்பூர்ணமாக அதாவது ஸரிகமபதநி என்ற ஏழு அட்க்ஷரம் தவிர ஸ்- ஸ்தாயி ஸட்ஜத்துடன் கூடிய 8 அட்க்ஷரமே மேளராகத்திற்கு அங்கலட்க்ஷணமாகும். தற்போது ஜன்யராகத்தைப் பார்ப்போம். ஒரே மேள ராகத்தில் பிறந்த ராகம் ஜன்யராகம் ஆகும். ஒவ்வொரு மேளராகத்திற்கும் அனேக ஜன்யராகம் உண்டு. ஒவ்வொரு மேள ஜன்யராகத்திற்கு வரும் ஸ்வரம். அந்த மேள ராகத்தின் ஸ்வரத்தையே கொண்டிருக்கும். ஸப்தஸ்வரங்களுடைய ஆரோஹண அவரோஹணத்திற்கு ஸம்பூர்ணம் என்றும், ஒரு ஸ்வர வர்ஜமாகி (குறைந்து) 6 ஸ்வரங்களுடைய ஆரோஹண, அவ்ரோஹணத்திற்கு ஷாடவம் என்றும், இரண்டு ஸ்வரங்கள் குறைந்து வரும் ஆரோஹண, அவரோஹணத்திற்கு ஔடவம் என்றும் பெயர் பெறும். மூன்று ஸ்வரங்கள் குறைந்து வரும் ஆரோஹண, அவரோஹணத்திற்கு ஸ்வராந்தரம் என்றும் பெயர். உதாரணம் நவரஸக்கன்டை. அடுத்து இப்போது ஸம்பூர்ணம், ஷாடவம், ஔடவம் போன்றவை பல வகையாக வரும். இதில் ஷாடவ ஸம்பூர்ணம், ஔடவ சம்பூர்ணம். ஸம்பூர்ண ஷாடவம், ஸம்பூர்ண ஔடவம் ஷாடவம் - ஷாடவம், ஔடவம் - ஔடவம். ஷாடவம் - ஔடவம். ஔடவம் - ஷாடவம் என வகைப்படுகிறது. தற்போது வக்ர ராகத்தினைப் பார்ப்போம்: ஆரோஹண, அவரோஹணத்திலும் சரி, இல்லை, இரண்டிலுமாவது சரி ஸ்வர வரிசைகள் கிரமகதியில் போகாமல் திரிந்து செல்லுமானால் அது வக்ர ராகமாகும். அடுத்து தாய் ராகத்தில் வரும் ஸ்வரங்களை எடுத்துக் கொள்ளும் ஜன்ய ராகங்கள் உபாங்க ராகம் எனப்படும். இதில் சில ஜன்யராகங்கள் ரஜ்ஜகத்தின் பொருட்டு அன்னிய ஸ்வரங்களை, தாய் ராகத்தில் இல்லாத ஸ்வரங்களாக வரும். இதுவே பாஷாங்க ராகம் எனப்படும்.

1. உபாங்கத்திற்கு உதாரணம் சில தருகிறேன் : ஆபோகி, மத்யமாவதி, ஸ்ரீராகம், தன்யாஸி மோஹனம், சுத்தஸாவேரி, ஸரஸ்வதி, கேதாரகௌளை.
2. பாஷாங்கத்திற்கு சில உதாரணங்கள் : பைரவி, காம்போதி, அடாண, அஸாவேரி சாரங்கா, முகாரி, ஆகும். மேற்படி ராகங்கள் ஸ்ரீத்யாகராஜ க்ருதிமாலாவில் வருகிறது. பார்த்து பாடி தெரிந்து கொள்ளவும்.

இனி ஒரு ராகம் வக்ரம், வர்ஜம், உபாங்கமாக இருக்கும். உதாரணமாக : சுத்தபங்காள.

ஒரு ராகத்தில் பாஷாங்கம், வக்ரமாக, வர்ஜமாக வரும். இதற்கு உதாரணம் : அடாண அஸாவேரி, முகாரி, இந்த ராக கீர்த்தனைகள் கூட த்யாகராஜ க்ருதிமாலாவில் உள்ளது.

**இனி கிருதி வகைகளைப் பார்ப்போம் :**

பாடல்களுக்கு க்ருதி என்று பெயரும் உண்டு. உருப்படி என்று மற்றொரு பெயரும் உண்டு. தாளத்தோடு பாடக்கூடிய வகைக்கு கிருதி என்றும், தாளம் இல்லாது இராகம் அமைத்து பாடுவதற்கு விருத்தம் என்று பெயர். பல ராகங்களை அமைத்து தாளத்துடன் பாடுவதற்கு தாளராக மாலிகை என்று பெயர். அதனை பல ராகங்களை அமைத்து தாளமில்லாமல் பாடுவதை "ராகமாலிகை விருத்தம்" என்று பெயர்.

சங்கீதத்தில் இரண்டு வகை : அவை கல்பிதம், மனோதர்மம்.

1. கல்பிதம் ஏற்கனவே அமைக்கப்பட்ட கிருதிகள்.
2. மனோதர்மம் : கீர்த்தனைகளை விஸ்தரித்து பாடி, நிரவல் செய்து, கல்பனாஸ்வரம் போட்டு பாடுவது ஆகும்.

இனி இப்புத்தகத்தில் கையாளப்பட்டுள்ள தாள வகைகளை பார்ப்போம் :

மொத்தம் தாள வகைகள் 7. அவை ஆதிதாளம், ரூபகம், த்ருவதாளம், மட்யதாளம், அடதாளம், ஜம்பதாளம், த்ரிபுடதாளம், ஏக தாளம். இது த்யாகராஜக்ருதிமாலாவிற்கு முதன்மையாக ஆதிதாளம், ரூபகம் என்று ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

**தாளவகைகளை காண்போம் :**

ஒரு லகுவிற்கு ஐந்து ஜாதி பேதத்தால் ஏழு தாள வகைகளில் ஒவ்வொன்றுக்கும், ஐந்து த்ாள விவரமும் ஏற்பட்டு மொத்தம் 35 தாள வகைகள் ஏற்படுகிறது. திருதம், அநுதிருதத்திற்கு எப்போதும் பேதம் கிடையாது. லகுவிற்கு மட்டுமே பேதங்கள்.

அந்த ஐந்துவகை பேதங்கள் முறைப்படி :- திஸ்ரம், சதுஸ்ரம், கண்டம், மிஸ்ரம், ஸங்கீர்ணம் போன்ற ஜாதி வகைகள். இப்படி ஏற்பட்டபேத வகைகளுக்கு 35 அலங்காரங்கள் உள்ளது. பின்பு இதனை பார்ப்போம்.

தாளம் ஆறு வகைகளைக் கொண்டது:- அவை லகு, த்ருதம், அனுத்ருதம், குரு, ப்லுதம் காகபாதம். நமக்கு நடைமுறையில் ப்ரயோகத்திற்கு உள்ளது மூன்று அங்கங்களே. குரு, ப்லுதம், காகபாதம் போன்ற அங்கங்களும் 108 தாள வகையில் 6 அங்கங்களையும் பார்க்கலாம்.

மூவகை பேதங்களுக்கு விரிவுரை பார்ப்போம் : லகு, த்ருதம், அனுத்ருதம்.

1. லகுவிற்கு 1 தட்டு, 3 விரல் அக்ஷரமும், அடையாளக்குறி - 1
2. அனுத்ருதத்திற்கு 1 தட்டு, அடையாளக்குறி - U
3. த்ருதத்திற்கு 1 தட்டும், 1 வீச்சும், அடையாளக்குறி - 0

இதேபோல் ரூபகத்திற்கு - ஒரு த்ருதம், ஒரு லகு. அடையாளக்குறி த்ருதம் - 0

" - லகு அடையாளக்குறி லகு - 1

இம்மாதிரி " இரண்டு கோடுகள் 1 லகு 2 த்ருதம் ஆகிய தாளத்தின் முடிவைக் காட்டுகிறது "

**அடுத்து க்ருதிகளில் வரும் எண்களின் விவரம் :**

தற்போது க்ருதிகளில் 1, 2, 3, 4 என்று சாகித்யங்களில் குறிப்பிட்டதை காண்கிறோம். அது ஸாகித்யம் தெலுங்கு, ஸமஸ்க்ருதம் ஆக இருப்பின் உச்சரிப்பு நிமித்தம் அவ்விதம் எண்கள் காட்டப்படுகிறது.

$க_1$, $க_2$, $க_3$, $க_4$.

1. $க_1$ - சற்று அழுத்தமாக உச்சரிக்க வேண்டும்.

$க_2$ - மிக சற்று அழுத்தமாக உச்சரிக்க வேண்டும்.

$க_3$ - தொண்டையிலிருந்து ஒலி எழுப்பி க என்று சொல்லவும்.

$க_4$ - அதே தொண்டையிலிருந்து கா என்று ஒலி நீட்டிய சப்தத்தோடு சொல்லவும்.

இந்த விளக்க உரை போதுமானதாகாது. இளம் சிராக்கள் அனுபவத்தில் அறியவும்.

அப்யாஸம் : இனி குழந்தைகள் அதிகாலையில் எழுந்து பாடும் பழக்கத்தை கொள்ள வேண்டும். அதிகாலையில் மனனம் செய்வது மறப்பதில்லை

என்பது தொன்றுதொட்டு வந்த பழக்கம். காலையில் எழுந்து 3 காலங்களை நன்கு அப்யஸிக்க வேண்டும். ஏனென்றால் கீர்த்தனையில் விளம்பித, மத்ய, த்ருத லயங்கள் வரும். விளம்பிதத்தை, அடுத்து த்ருதலயம் வரலாம். அதாவது 1 காலம், 2ம் காலம் வரலாம்.

உதாரணமாக : பால ஸ்ரீ ரிஸ்ஸநிஸ்ரீ இம்மாதிரி கோடு.

4 அக்ஷரங்கள் – இரண்டு அக்ஷரமாக்கப்படுகிறது.

த்ருதஸர – பத பதநீ தநிஸ்ா நிஸ்ரிம் இங்கு பத 1 அக்ஷரம் பதநீ ஒரு அக்ஷரம். நான்கு அக்ஷரங்களுக்கு கீழ் ═══ இம்மாதிரி கோடு வந்தால் அந்த நான்கு ஸ்வரங்கள், 1 ஸ்வரத்திற்கு சமம்.

நான்கு அக்ஷரத்திற்கு கீழ் பமகா இம்மாதிரி ஒரு கோடு வந்தால் இரண்டு அக்ஷரத்திற்கு சமம்.

தற்போது முதல் கீர்த்தனத்தை பார்ப்போம் : ரீபர பமகமரீ

கி ரி ரா ... ஜ

தற்போது கோடு போடாமல் ஸ்வரம் உள்ளதால், இதனை மத்ய லயமாக நான்கு அக்ஷரம் என்று கொள்ள வேண்டும்.

ரீபா – என்னும்போது கார்வையோடு கூடிய 4 அக்ஷரம் – ரீ – கார்வை

பமகம – அதே நான்கு அக்ஷரம் தான். ஆனால் இதை கார்வையோடு பாடாமல் ராவிற்கு பின் மூன்று புள்ளி உள்ளதை . . . அகாரமாகக் கொண்டு ரா வை கமகத்தோடு பாட வேண்டும்.

இனி கீர்த்தனைகளில் வரும் புள்ளிகளை சற்று கவனிப்போம் :

1. ஒரு கீர்த்தனையில் ஒரு ஸ்வரத்தில் – ஸ் – மேல் புள்ளி வைக்கப்பட்டிருக்குமானால் அது ஸ்தாயிக்கும் மேல் அதிதாரஸ்தாயிக்கும் என்று கொள்ளவும்.
2. ஒரு கீர்த்தனையில் : ஸ்வரத்திற்கு கீழ் ஸநிதா புள்ளி வருமானால் அதை மந்த்ரஸ்தாயி ஸஞ்சாரம் என்று தெரிந்து கொள்ளவும்.

ஒரு கீர்த்தனையில் : புள்ளிகளே வைக்காத ஸ்வரமாக இருக்குமானால் பமகா மத்ய ஸ்தாயி என்று தெரிந்து கொள்ளவும்.

இனி தாள வகைகளுக்கு அக்ஷர விவரம் அறிந்து கொள்வோம் :

| | | | |
|---|---|---|---|
| . | இந்த அடையாளம் 1 அக்ஷரம் | இதற்கு கால் இடம் என்றும் | என்றும் ஸங்கீதம் பாடும் இளம் கலைஞர்கள் தெரிந்து கொள்ளவும் |
| ; | இந்த அடையாளம் 2 அக்ஷரம் | இதற்கு அரை இடம் என்றும் | |
| ; . | இந்த அடையாளம் 3 அக்ஷரம் | இதற்கு முக்கால் இடம் என்றும் | |
| ; ; | இந்த அடையாளம் 4 அக்ஷரம் | இதற்கு முழு இடம் என்றும் | |

ஆசிரியர்கள், ஆசிரியைகள் எடுப்பு எடு என்று சொல்லும்போது மேற்படி விவரத்தை தெரிந்து கொள்ளவும்.

தாள அக்ஷர விவரம் பார்க்கலாம் :

1. ஒரு லகுவிற்கு ஆதிதாளத்திற்கு 16 அக்ஷரங்கள், 32 அக்ஷரங்கள்.
2. 16 அக்ஷரங்களை 1 களை என்றும், 32 அக்ஷரங்களை 2 களை சவுக்கம் என்றும் கொள்ளவும்.

இதே போல் ரூபகத்திற்கு 12 அக்ஷரங்கள், 24 அக்ஷரங்கள் வரும்.

12 அக்ஷரங்களை 1 களை என்றும், 24 அக்ஷரங்களை 2 களை என்றும் கொள்ளவும்.

உதாரணம் : , ததாதாதா – இங்கு 8 அக்ஷரத்திற்கு 1 அக்ஷரம் ஒதுக்கியிருப்பதை காணவும்.

; கமகதபா – ஆக 8 அக்ஷரத்திற்கு 2 அக்ஷரம் ஒதுக்கியிருப்பதை காணவும்.

; , மமகரீபா – இங்கு 8 அக்ஷரத்திற்கு 3 அக்ஷரம் ஒதுக்கியிருப்பதை காணவும்.

; ; ; இம்மாதிரி 6 அக்ஷரங்களை ஒதுக்கிக் காட்டினால் (1 1/2 இடம்) ஒன்றரை இடம் ஒதுக்கப்பட்டது என்று தெரிந்து கொள்ளவும்.

; ; இம்மாதிரி காட்டி பின் ஸாகித்யம் துவங்கியிருக்குமானால் (1 இடம்) ஒரு இடம் ஒதுக்க வேண்டும் என்பதை தெரிந்து கொள்ளவும்.

உதாரணம் : எந்தரோமஹானுபாவுலு.

ஆசிரியைகள், ஆசிரியர்கள், மாணாக்கர்கள், மாணவிகள், கால் இடம் எடு என்னும்போது தட்டிய உடன் கீர்த்தனையை துவங்கிவிட வேண்டும்.

அரை இடம் ஒதுக்கு 1/2 என்றால் தட்டி சற்று நேரத்தில் துவங்கிவிட வேண்டும்.

முக்கால் இடம் ஒதுக்கு 3/4 என்றால் தட்டி அரை இடத்தின் அளவுக்கும் சற்று தாமதித்து துவங்கிவிட வேண்டும்.

அதே ஒரு இடம் என்றால் ; ; ஒரு தட்டு நீக்கிவிட்டு, சுண்டு விரலில் இருந்து எடுக்க வேண்டும்.

இதனையே மாத்திரைகளாக கூறுவதை அடுத்த பதிப்பில் பார்க்கலாம்.

பல ஆண்டுகளுக்கு முன் சங்கீத உச்சரிப்புகளுக்கு தெரிவிக்கப்பட்ட குறிப்புகள் :

$க_1$, $க^v_1$, $த்^vர$, $த்^v_1ரா$, இதில் $க_1$ தனியாக ஒலிப்பதற்கு அடையாளம்.

$க^v_1$ சற்று அழுத்தமாக க வை உச்சரிக்க வேண்டும்.

$த்^vர$ முதலில் தோன்றும் 'த்' உச்சரிப்பு பட்டும் படாமலும் ர மட்டும் கேட்கும் வண்ணம் ஒலிக்க வேண்டும்.

$த்^v_1ரா$ முதலில் தோன்றும் த் உச்சரிப்பில், த் பட்டும் படாமலும் ரா மட்டும் கேட்கும்படி நீண்ட ஒலியோடு $த்^v_1ரா$ வை ஒலிக்கணும்.

இப்படிக் காட்டப்பட்ட மேற்படி ஒலி விவரங்கள் தற்போது நடைமுறையில் குறியிடுவது கிடையாது. இதைவிட்டு தற்போது 1, 2, 3, 4 என்று குறிப்பிடப்படுகிறது. ஸம்ஸ்க்ருத எழுத்தொலியின் வடிவக்குறியாகும்.

இனிக்கிருதியில் அங்கங்கள் எவை என்று பார்ப்போம்.

1. ஒரு கீர்த்தனைக்கு நான்கு அங்கங்கள். அவை,

பல்லவி, அனுபல்லவி, சரணம், அனுபோல் இவையாவும் ஒரு கீர்த்தனையின் அங்கங்கள். இனி ஒரு கீர்த்தனை எழுதும்போது எதையெல்லாம் குறிப்பிட வேண்டும் என்பதனை பார்ப்போம். ஒரு கீர்த்தனை எழுதினுல் அதற்குரிய ராகம் பெயர், என்ன தாளம், மேளராகமா? இல்லை ஜன்யமா? ஜன்யமென்றால் எதன் ஜன்யம், இது தவிர கீர்த்தனையின் கர்த்தா யார் என்பதையும் எழுத வேண்டும்.

முடிவுற்றது.

## அட்டவணை

| பாட்டு எண் | கீர்த்தனைகளின் பெயர் | தாளம் | கீர்த்தனையின் ராகம் | பக்க எண் | மேள எண் | ஆரோஹணம் அவரோஹணம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | கிரிராஜ | ஆதி | பங்காள | | 29வது மேள ஜன்யம் | ஸரிகம பநி பஸ்<br>ஸ்நிபம ரிகரிஸ |
| 2. | குருலேக | கண்ட சாபு | கௌரிமனோஹரி | | 23வது மேளம் | சம்பூர்ணம் |
| 3. | ஏலநீதயராது | ஆதி | அடாண | | 29வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதாபாமபகாமரிஸ |
| 4. | மானமுலேதா | ஆதி | ஹமீர் கல்யாணி | | 65வது மேள ஜன்யம் | ஸரிகம பநிஸ்<br>ஸநிதப மகாம* ரிஸ |
| 5. | நகுமோமுகனலேநி | ஆதி | ஆபேரி | | 20வது மேள ஜன்யம் | ஸகம பநிஸ்<br>ஸ்நிதப மகரிஸ |
| 6. | தாரின் தெலுஸு | ஆதி | சுத்தஸாவேரி | | 29வது மேள ஜன்யம் | ஸரிமப தஸ்<br>ஸ்தபம ரிஸ |
| 7. | மோக்ஷமுகலதா | ஆதி | சாரமதி | | 20வது மேள ஜன்யம் | ஸரிகம பதநிஸ்<br>ஸ்நிதம கஸ |
| 8. | க்ஷீரஸாகரஸயன | ஆதி | தேவகாந்தாரி | | 29வது மேள ஜன்யம் | ஸரிமகமபதநிஸ்<br>ஸ்நி தபமகரிஸ |
| 9. | மனஸு நில்ப | ஆதி | ஆபோகி | | 22வது மேள ஜன்யம் | ஸரிகம தஸ்<br>ஸ் தம கரிஸ |
| 10. | ராராமாயிண்டி | ஆதி | அஸாவேரி | | 8வது மேள ஜன்யம் | ஸரி மபதஸ்<br>ஸ்நிஸ் பதமபமகரிஸ |
| 11. | எதுடநிலசிதே | ஆதி | சங்கராபரணம் | | 29வது மேளம் | ஸம்பூர்ணம் |
| 12. | எந்த நின்னே வர்ணிந்து | ரூபகம் | முகாரி | | 29வது மேள ஜன்யம் | ஸரிமப நிதஸ்<br>ஸ்நிதப மகரிஸ |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ஜகதாநந்தக | ஆதி | நாட | | 36வது மேள ஜன்யம் | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிபமரிஸ |
| 2. | துடுகு கல | ஆதி | கௌளை | | 15வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ்<br>ஸ்நிபமரிகமரிஸ |
| 3. | ஸாதிம்செநெ | ஆதி | ஆரபி | | 29வது மேள ஜன்யம் | ஸரிமபதஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 4. | கனகனருசிரா | ஆதி | வராளி | | 39வது மேள ஜன்யம் | ஸகரிகம பதநிஸ்<br>ஸ்நிதப மகரிஸ |
| 5. | எந்தரோமஹானுபாவு | ஆதி | ஸ்ரீ ராகம் | | 22வது மேள ஜன்யம் | ஸரிமப நிஸ்<br>ஸ்நிபமரிகாரிஸ |

| பாட்டு என் | கீர்த்தனைகளின் பெயர் | தாளம் | கீர்த்தனையின் ராகம் | பக்க என் | மேள என் | ஆரோஹணம் அவரோஹணம் |
|---|---|---|---|---|---|---|
| 13. | ராஜுவெடல | ரூபகம் | தோடி | | 8வது மேள ஜன்யம் | ஸரிகம பதநிஸ்<br>ஸ்நிதம கரிஸ |
| 14. | ராமநன்னு | ரூபகம் | ஹரிகாம்போதி | | 28வது மேளம் | ஸம்பூர்ணம் |
| 15. | கலிகியுண்டே | ஆதி | கீரவாணி | | 21வது மேளம | ” |
| 16. | கானமூர்த்தே | ஆதி | கானமூர்த்தி | | 3வது மேளம் | ” |
| 17. | ராம நீஸமான | ரூபகம் | கரகரப்ரியா | | 22வது மேளம் | ” |
| 18. | பாகாய நய்ய | ஆதி | சந்திரஜோதி | | 41வது மேள ஜன்யம் | ஸரிகம பதஸ்<br>ஸ்தபமகரிஸ |
| 19. | ராமாபி ராம | மிஸ்ர சாபு | தர்பார் | | 22வது மேள ஜன்யம் | ஸரிமப தநிஸ்<br>ஸ்நிதபமரிகாகாரிஸ |
| 20. | நாதோ பாஸன | ஆதி | பேகட | | 29வது மேள ஜன்யம் | ஸகரிகம பதநீ தபஸ்<br>ஸ்நீதபமாகரிஸ |

# அட்டவணை தொடர்ச்சி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 21. | துன்மார்கசரா | ரூபகம் | ரஞ்ஜனி | | 59வது மேள ஜன்யம் | ஸரிகமதஸ் ஸ்நிதமகஸ |
| 22. | தெரதீய கராதா | ஆதி | கௌளீபந்து | | 15வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ் ஸ்நிதபமகரிச |
| 23. | நிதி சால சுகமா | மிஸ்ர சாபு | கல்யாணி | | 65வது மேள ஜன்யம் | ஸரிகம பதநிஸ் ஸ்நிதபமபகரிஸ |
| 24. | ராம கதா ஸுதா | ஆதி | மத்யமாவதி | | 22வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ் ஸ்நிபமரிஸ |
| 25. | அனு ராக முலே | ஆதி | ஸரஸ்வதி | | 64வது மேள ஜன்யம் | ஸரிமபதஸ் ஸ்நிதபமரிஸ |
| 26. | மீவல்லகுணதோஷ | ஜம்பை | காபி | | 22வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ் ஸ்நிதபமகாரிஸா |
| 27. | பரமாத்முடுவெலிகே | ஆதி | வாகதீஸ்வரி | | 34வது மேளம் | ஸம்பூர்ணம் |
| 28. | ப்ரோ சேவாரெவ் ரே திவ்யநாம கீர்த்தனை | ஆதி | ஸ்ரீ ரஞ்ஜனி | | 22வது மேள ஜன்யம் | ஸரிகமதநிஸ் ஸ்நிதமகரிஸ |
| 29. | ப்ரோவபாரமா | ஆதி | பகுதாரி | | 28வது மேள ஜன்யம் | ஸகமபதநிஸ் ஸ்நிதநிபமகஸ |
| 30. | நினுவினாநாமதெந்து | ரூபகம் | நவரஸகன்டை | | 28வது மேள ஜன்யம் | ஸகமபஸ் ஸ்நிதமகரிஸ |
| 31. | விடஜாலதுரா | ஆதி | ஜனரஞ்ஜனி | | 29வது மேள ஜன்யம் | ஸரிகமபநிஸ் ஸ்தபமரிஸ |
| 32. | எந்தவேடு | ஆதி | ஸரஸ்வதி மனோஹரி | | 28வது மேள ஜன்யம் | ஸரிகம தஸ் ஸ்தநிபமகரிஸ |
| 33. | ஒரஜுபு | ஆதி | கன்னடகௌளை | | 28வது மேள ஜன்யம் | ஸரிகமபநிஸ் ஸ்நிதபமகஸ |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 34. | நேநெந்து | ஆதி | கர்நாடகபெஹாக் | | 28வது மேள ஜன்யம் | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிதநிபதமகரிகஸ |
| 35. | ராமாநீயெட | ஆதி | திலீபகம் | | 22வது மேள ஜன்யம் | ஸரிமபதநிதபமநிதநிஸ்<br>ஸ்நீதபமரிகாரிஸ |
| 36. | கீதார்தமு | ஆதி | சுரடி | | 28வது மேள ஜன்யம் | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதபமகமரிச |
| 37. | ராகஸுதாரஸ | ஆதி | ஆந்தாளி | | 28வது மேள ஜன்யம் | ஸரிமப நிஸ்<br>ஸ்நிதமரிகமரிச |
| 38. | சாந்தமுலேக | ஆதி | சாம | | 28வது மேள ஜன்யம் | ஸ்ரிமபதஸ்<br>ஸ்தபமகரிஸ |
| 39. | ரமாரமண | ஆதி | சங்கராபரணம் | | 29வது மேளம் | ஸம்பூர்ணம் |
| 40. | தெலிஸிராம | ஆதி | பூர்ணசந்திரிகா | | 29வது மேள ஜன்யம் | ஸரிகமபதபநிஸ்<br>ஸ்நிபமகமரிஸ |
| 41. | மங்களம் | ஆதி | சௌராஷ்டிரம் | | 17வது மேள ஜன்யம் | ஸரிமகமபதநிதச்<br>ஸ்நிதபமகரிஸ |

## அட்டவணை

| பாட்டு எண் | கீர்த்தனையின் பெயர் | கீர்த்தனையின் ராகத்தின் பெயர் | மேளம் | வரும் ஸ்வரங்கள் | ஆரோஹணம் அவரோஹணம் |
|---|---|---|---|---|---|
| 1. | கிரிராஜ | பங்காள | 29மேஜ | ஸ.சரி.அம்கா.சு.ம.ப.காநி.ப.ஸ்<br>ஸ்.காநி.ப.சு.ம.சரி.அம்கா.ஸ | ஸரிகமபநிபஸ்<br>ஸ்நிபமரிகஸ |
| 2. | குரு லேக | கௌரிமனோகரி | 23மே | ஸ.சரிசா.கா.சு.ம.பச.தைகா.நி<br>ஸ்.காநி.ச.தை.ப.சு.மசாகாசரிஸ | ஸம்பூர்ணம் |
| 3. | ஏலநீதயராது | அடாண | 29மேஜ | ஸ.ச.ரிசு.ம.ப.காநி.ஸ்<br>ஸ்.காநி.சதை.ப.சு.ம.ப.அம்காசு.ம.ச.ரி.ஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதாபமபகாமரிஸ |
| 4. | மானமுலேதா | ஹமீர்கல்யாணி | 65மேஜ | ஸ.சரி.அம்கா.பி.ம.ப.சதை காநிஸ்<br>ஸ் காநிச.தை.ப.பிம.அம்கா.சு.மச.ரி.ஸ | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிதபமகாம*ரிஸ |
| 5. | நகுமோமுகனலேநி | ஆபேரி | 20மேஜ | ஸ.சாக.சு.ம.ப.கைநி.ஸ்<br>ஸ்.கைநி.சதைப.சு.ம.சா.க.சரி.ஸ | ஸகமபநிஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 6. | தாரினிதெலுஸு | சுத்தஸாவேரி | 29மேஜ | ஸ.ச.ரி.சு.ம.ப.ச.தைஸ்<br>ஸ்.ச.தை.ப.சு.ம.ச.ரிஸ | ஸரிமபதஸ்<br>ஸ்தபமரிஸ |
| 7. | மோக்ஷமுகலதா | சாரமதி | 20மேஜ | ஸ.ச.ரிஸா.க.சு.மப.சதை.கைநிஸ்<br>ஸ்.கைநி.ச.தை.சு.ம.ஸா.க.ஸ | ஸரிகமபதநிச்<br>ஸ்நிதமகஸ |
| 8. | க்ஷீரஸாகரஸ்யன | தேவகாந்தாரி | 29மேஜ | ஸ.சரி.சு.ம.அம்கசு.மப.சதைகாநி.ஸ்.<br>ஸ்.காநி.ச.தை.ப.சு.ம.அம்கா.சரி.ஸ | ஸரிமகமபதநிஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 9. | மஸைூநில்ப | ஆபோகி | 22மே.ஜ | ஸ.ச.ரிஸா.க.சு.ம.சதைஸ்<br>ஸ்.ச.தை.சு.மஸாக.சரிஸ | ஸரிகம தஸ்<br>ஸ்தமகரிஸ |
| 10. | ராராமாயிண்டி | அஸாவேரி | 8மே.ஜ | ஸ.சுரிசு.ம.ப.சுதை.ஸ்<br>ஸ்கைநிஸ்.ப.சு.தை.சு.ம.ப.சு.மஸாகா.சு.ரி.ஸ | ஸரிமபதஸ்<br>ஸ்நிஸ்பதமபமகரிஸ |
| 11. | எதுடநிலசிதே | சங்கராபரணம் | 29மே | ஸ.ச.ரிஅம்கா.சு.ம.ப.ச.தைகாநி.ஸ்<br>ஸ்.காநி.ச.தை.ப.சு.மஅம்கா.ச.ரிஸ | ஸம்பூர்ணம் |
| 12. | எந்தநின்னே | முகாரி | 29மே.ஜ | ஸ.ச.ரி.சு.ம.ப.கா.நிச.தை.ஸ்<br>ஸ்.காநி.ச.தை.ப.சு.ம அம்கா.சரிஸ | ஸரிமபநிதஸ்ா<br>ஸ்நிதபமகரிஸ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஜகதாநந்தக | நாட | 36மே.ஜ | ஸ.ஷட்ரி.அம்கா.சு.ம.ப.ஷட்தைகா.நி.ஸ்<br>ஸ்.காநி.ப.சு.மச.ரிஸ | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிபமரிஸ |
| 2. | துடுகு | கெளளை | 15மே.ஜ | ஸ.சு.ரி.சு.ம.ப.காநிஸ்<br>ஸ்.காநி.ப.சு.ம.சு.ரி.அம்கா.சும.சு.ரிஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிபமரிகமரிஸ |
| 3. | ஸாதிம்செநெ | ஆரபி | 29மே.ஜ | ஸ.சரி.சு.மப.ச.தை.ஸ்<br>ஸ்.கா.நிச.தை.ப.சு.ம.அம்கா.ச.ரிஸ | ஸரிமபதஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 4. | கனகனருசிரா | வராளி | 39மே.ஜ | ஸ.சுரி.சு.க.பி.ம.ப.சு.தை.காநி.ஸ்<br>ஸ்.கா.நி.சு.தை.ப.பி.ம.சு.கா.சு.ரி.ஸ | ஸகரிகமபதநிஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 5. | எந்தரோமஹாநு | ஸ்ரீ ராகம் | 22மே.ஜ | ஸ.ச.ரி.சு.ம.ப.கைநி.ஸ்<br>ஸ்.கைநி.ப.சு.ம.ச.ரி.சா.கா.சரி.ஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிபமரிகாரிஸ |

| பாட்டு எண் | கீர்த்தனையின் பெயர் | கீர்த்தனையின் ராகத்தின் பெயர் | மேளம் | வரும் ஸ்வரங்கள் | ஆரோஹணம்<br>அவரோஹணம் |
|---|---|---|---|---|---|
| 13. | ராஜுவெடல | தோடி | 8.மே.ஜ | ஸ.சு.ரி.ஸாக.சு.மப.சு.தை.கைநி ஸ்<br>ஸ்.கை.நி.சுதை.சு.ம.ஸா.க.ச.ரி.ஸ | ஸரிகம பதநிஸ்<br>ஸ்நிதமகரிஸ |
| 14. | ராமநன்று | ஹரிசாம்போதி | 28மேளம் | ஸ.ச.ரி.அம்கா.சு.ம.ப.ச.தை.கை.நி.ஸ்<br>ஸ்.கைநி.சதை.ப.சு.ம.அம்கா.சரி.ஸ | ஸம்பூர்ணம் |
| 15. | கலிகியுண்டே | கீரவாணி | 21மேளம் | ஸ.ச.ரி.சா.கா.சு.ம.ப.சு.தைகாநி ஸ்<br>ஸ்.காநி.சு.தை.ப.சு.ம.சா.கா.ச.ரிஸ | ஸம்பூர்ணம் |
| 16. | கானமூர்த்தே | கானமூர்த்தி | 3மேளம் | ஸ.சு.ரி.சுகா.சு.ம.ப.சு.தைகாநிஸ்<br>ஸ்.காநி.சு.தை.ப.சு.மசுகாசுரி.ஸ | ஸம்பூர்ணம் |
| 17. | ராமநீஸமான | கரகரப்ரியா | 22மேளம் | ஸ.சரிஸா.கா.சு.மப.சதைகை.நிஸ்<br>ஸ்.கை.நி.ச.தை.ப.சு.மஸாகாசரி.ஸ | ஸம்பூர்ணம் |
| 18. | பாகாயநய்ய | சந்த்ரஜோதி | 41மே.ஜ | ஸ.சு.ரி.சு.க.பி.ம.ச.தை காநிஸ்<br>ஸ்.ச.தை.ப.பி.மசு.க.சு.ரிஸ | ஸரிகமபதஸ்<br>ஸ்தபமகரிஸ |
| 19. | ராமாபிராமா | தர்பார் | 22மே.ஜ | ஸ.ச.ரி.சு.மபச.தைகை.நிஸ்<br>ஸ்கைநிச.தைபசு.ம.ச.ரி சாகாசாகாசரிஸ | ஸரிமபதநிஸ்<br>ஸ்நிதபமரிகாகாரிஸ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 20. | நாதோபாஸன | பேகட | 29மே.ஜ | ஸ.அ்மக.ச.ரிஅ்மகசு.மபசதைகாநிசதைபஸ்<br>ஸ்.காநீ.சதைபசு.மஅ்மகச.ரிஸ | ஸகரி கமபதநீதபஸ்<br>ஸ்நீதபமாகரிஸ |
| 21. | துன்மார்கசரா | ரஞ்ஜனி | 59மே.ஜ | ஸ.ச.ரி.ஸாக.பி.மச.தைஸ்<br>ஸ்.காநி.ச.தைபி.ம.ஸாக.ஸ | ஸரிகமதஸ்<br>ஸ்நிதமகஸ |
| 22. | தெரதீயக | கௌளிபந்து | 15மே.ஜ | ஸ.சு.ரி.சு.ம.ப.காநி.ஸ்<br>ஸ்.காநி.சு.தைபசு.மஅ்மகாசு.ரிஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதபமகரிச |
| 23. | நிதிசாலஸுகமா | கல்யாணி | 65மே.ஜ | ஸ.சரிஅ்மக.பிம.சதைகாநிஸ்<br>ஸ்.காநி.சதைபபி.மபஅ்மகசரிஸ | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிதபமபகரிஸ |
| 24. | ராமகதா ஸுதா | மத்யமாவதி | 22மே.ஜ | ஸ.ச.ரி.சும.ப.கைநி.ஸ்<br>ஸ்.கைநி.ப.சு.ம.ச.ரி.ஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிபமரிஸ |
| 25. | அனுராகமுலே | ஸரஸ்வதி | 64மே.ஜ | ஸ.சரிபி.ம.பச.தைஸ்<br>ஸ்.கைநி.ச்.தை.ப.பிம.ச.ரி.ஸ | ஸரிமபதஸ்<br>ஸ்நிதபமரிஸ |
| 26. | மீவல்லகுணதோஷ | காபி | 22மேஜ | ஸ.ச.ரி.சு.ம.பகைநி.ஸ்<br>ஸ்.கைநி.ச.தை.ப.சு.ம.சாகச.ரிஸ. | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதபமகரிஸ |
| 27. | பரமாத்முடு | வாகதீஸ்வரி | 34மேளம் | ஸ.ஷட்ரிஅ்மகாசு.மபச.தைகைநி.ஸ்<br>ஸ்.கைநி.ச.தை.ப.சு.ம.அ்மகா.ஷட்ரி.ஸ | ஸம்பூர்ணம் |
| 28. | பரோசேவா | ஸ்ரீ ரஞ்ஜனி | 22மே.ஜ | ஸ.ச.ரி.ஸாகா.சு.மச.தைகைநிஸ்<br>ஸ்கைநி.ச.தை.சும.ஸாக.சரி.ஸ | ஸரிகமதநிஸ்<br>ஸ்நிதமகரிச |
| 29. | பரோவபாரமா | பகுதாரி | 28மே.ஜ | ஸ.அ்மக.சு.ம.ப.ச.தைகைநிஸ்<br>ஸ்.கைநி.ச.தை.கைநி.ப.சு.மஅ்ம்.கா.ஸ | ஸகமபதநிஸ்<br>ஸ்நிதநிபமகஸ |
| 30. | நினுவினாநாமதெந்து | நவலஸகன்டை | 28மேஜ | ஸ.அ்மக.சு.ம.ப.ஸ்<br>ஸ்கைநி.ச.தை.சு.ம.அ்மகச.ரிஸ | ஸகமபஸ்<br>ஸ்நிதமகரிஸ |
| 31. | விடஜாலதுரா | ஜனரஞ்ஜனி | 29மேஜ | ஸ.சரி.அ்மக.சு.ம.ப.காநி.ஸ்<br>ஸ்.சதை.ப.சு.ம.ச.ரிஸ | ஸரிகமபநிஸ்<br>ஸ்தபமரிஸ |
| 32. | எந்த வேடு | ஸரஸ்வதிமனோஹரி | 28மேஜ | ஸ.ச.ரி.அ்மகா.சும.சதை.ஸ்<br>ஸ்.சதைகைநி.ப.சு.ம.அ்மகச.ரி.ஸ. | ஸரிகமதஸ்<br>ஸ்தநிபமகரிஸ |
| 33. | ஒரஜுபு | கன்டைகௌள | 28மே.ஜ | ஸ.ச.ரி அ்மகா.சு.ம.பகை.நிஸ்<br>ஸ்.கைநி.ச.தை.ப.சு.மஅ்மக.ஸ | ஸரிகமபநிஸ்<br>ஸ்நிதபமகஸ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 34. | நேநெந்து | கர்நாடகபெஹாக் | 28மே.ஜ | ஸ.ச.ரி.அம்க.சு.ம.ப.சதைகைநி ஸ்<br>ஸ்.கைநி.ச.தை.கைநி.ப.ச.தை.சு.ம<br>அம்கசரி.அம்க.ஸ | ஸரிகமபதநிஸ்<br>ஸ்நிதநிபதமகரிகஸ |
| 35. | ராமாநீயெட | திலீபகம் | 22மே.ஜ | ஸ.சரி.சு.ம.ப.ச.தைகைநி.சதை<br>ப.சு.மகைநிச.தை.கைநிஸ்<br>ஸ்கைநி.ச.தை.ப.சு.மசரி.சாகாச.ரி.ஸ | ஸ்ரிமபதநிதபமநிதநிஸ்<br>ஸ்நீதபமரிகாரிஸ |
| 36. | கீதார்த்தமு | சுரடி | 28மேஜ | ஸ.ச.ரி.சு.ம.பகைநிஸ்<br>ஸ்கைநி.ச.தை.ப.சு.மஅம்கா.சு.மச.ரி.ஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதபமகமரிச |
| 37. | ராகஸுதாரஸ | ஆந்தாளி | 28மே.ஜ | ஸ.ச.ரி.சு.ம.ப.கை.நி.ஸ்<br>ஸ்.கைநி.ச.தை.சு.மசரி.அம்க.சு.ம.ச.ரி.ஸ | ஸரிமபநிஸ்<br>ஸ்நிதமரிகமரிஸ |
| 38. | சாந்தமுலேக | சாம | 28மே.ஜ | ஸ.சரி.சு.ம.ப.ச.தை.ஸ்<br>ஸ்.ச.தை.ப.சு.மஅம்க.சரி.ஸ | ஸரிமபதஸ்<br>ஸ்தபமகரிஸ |
| 39. | ரமாரமண | சங்கராபரணம் | 29மே.ஜ | ஸ.ச.ரி.அம்க.சு.ம.ப.ச.தைகாநிஸ்<br>ஸ்.காநி.ச.தை.ப.சு.மஅம்க.ச.ரி.ஸ | ஸம்பூர்ணம் |
| 40. | தெலிஸிராம | பூர்ண சந்த்ரிகா | 29மே.ஜ | ஸ்சரிஅம்க.சு.ம.ப.ச.தை.பகாநிஸ்<br>ஸ்.காநி.ப.சு.ம.அம்க.சு.மச.ரிஸ | ஸரிகமபதபநிஸ்<br>ஸ்நிபமகமரிஸ |
| | மங்களம் | சௌராஷ்டிரம் | 17மே.ஜ | ஸ.சு.ரி.சு.மஅம்க.சு.ம.ப.ச.தைகாநி.ச.தை.ச்<br>ஸ.காநி.ச.தை.ப.சு.ம.அம்காசு.ரி.ஸ | ஸரிமகமபதநிதச்<br>ஸ்நிதபமகரிஸ |

மேலே உள்ள அட்டவணையில் சுருக்கப்பட்ட எழுத்துக்களுக்கு விரிவான விளக்கம்

அட்டவணையில் உள்ள (6) காலங்களின் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1ம் காலம்<br>2ம் காலம்<br>3ம் காலம்<br>4ம் காலம் | பாட்டு எண்<br>கீர்த்தனையின் பெயர்<br>கீர்த்தனையின் ராகம்<br>கீர்த்தனை எந்த மேளத்தை சேர்ந்தது. இதில் மே.ஜ என்றால் மேள ஜன்யம் என்றும் மே என்றால் மேளம் என்று தெரிந்து கொள்ளவும். | 6ம் காலம் – ஆரோஹணம் – அவரோஹணம் :- இது ஒவ்வொரு கீர்த்தனைக்கும் வரும் ஸ்வரங்களை குறிக்கும் அடையாளமாகும். பயிற்சி செய்யும் இளம் தளிர்களுக்கு இக்குறிப்புகள் மிகவும் முக்யமானதால், இந்த விளக்க உரை கொடுத்துள்ளேன்.<br>5ம் காலத்தில் உள்ள எல்லா சுருக்கெழுத்துகளுக்கும் விரிவு விளக்கம். |
| 5ம் காலம்<br><br>5ம் காலத்தின சுருக்கெழுத்தின் விரிவு விளக்கம் | கீர்த்தனைகளில் வரும் ஸ்வரங்களின் சுருக்கெழுத்து<br><br>ஸ – ஸட்ஜம்<br>ரி – ரிஷபம்<br>க – காந்தாரம்<br>ம – மத்யமம்<br>ப – பஞ்ஜமம்<br>த – தைவதம்<br>நி – நிஷாதம்<br>ஸ் – ஸட்ஜம் (தாரஸ்தாயி) | ஸ – ஸட்ஜம்<br>ரி – ரிஷபம்<br>சு – சுத்தரிஷபம்<br>ச – சதுஸ்ருதிரிஷபம்<br>ஷ – ஷட்ருதிரிஷபம்<br>க – காந்தாரம்<br>சு.க – சுத்தகாந்தாரம் ஸா – சாதாரணகாந்தாரம் அம் : அந்த்ரகாந்தாரம்<br>ம – மத்யமம்<br>சு.ம – சுத்தமத்யமம் – பி.ம – பிரதி மத்யமம்<br>ப – பஞ்ஜமம்<br>த – தைவதம்<br>த – சு.த. சுத்ததைவதம் – ச.தை. சதுஸ்ருதிதைவதம் – ஷட்ருதி தைவதம்<br>நி – சு.நி. சுத்த நிஷாதம் – கை.நி. கைசிகநிஷாதம் – கா.நி. காகலி நிஷாதம்<br>ஸ் – தாரஸ்தாயி ஸட்ஷம்<br>நி – நிஷாதம் |

ஆரோஸணம், அவரோஹணம், கொடுக்கப்பட்டதை தவிர, எந்த குறிப்பும் இல்லாமல் ஸம்பூர்ணம் என்று ஒரு ராகத்திற்கு கொடுக்கப் பட்டிருக்குமானால், அதற்கு எல்லா ஸ்வரங்களும் அதாவது ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற ஸப்த ஸவரங்களும், வரிசையாக இருக்கும். அப்போது அந்த மேளத்திற்குரிய ஸ்வரங்களில் பாடணும். மேள ராகத்திற்கு வரும் ஸ்வரங்களை ஸம்பூர்ணம் என்று குறிப்பிடப்படும். ஸம்பூர்ணம் என்று ஒரு ராகத்திற்கு குறிக்கப் பட்டிருக்குமானால் அது மேள கர்த்தாராகம் என்று தெரிந்து கொள்ளவும்.

# "ஸ்ரீ த்யாகராஜ க்ருதிமாலா" பதவுரை

1. **"கிரிராஜஸுதாதனய"** – முழு முதற் கடவுளே – பார்வதி மைந்தனே – தேவர் மூவர் வணங்கும் முதல்வனே. என் இன்னல்களை தீர்ப்பவனே, எனக்கு அருள் புரிவாய். என விஞயகரை வேண்டுகிறார். ஸ்ரீ த்யாகப்பிரும்மம்.

**தெளிவுரை :** முழு முதற் கடவுளாகிய விஞயகப் பெருமானை துதித்து நாமும் இளந்தளிர்களும் வணங்குவோம். எந்த பூஜை ஆராதனைக்கும் விஞயகப் பெருமானை வழிப்பட்ட பிறகு தான் ஆரம்பிக்கப்படும். இது மரபு என்பதை ஸ்ரீ த்யாகப்பிரும்மம் இந்தக்ருதியை பாடியுள்ளார்.

2. **"குருலேகஎடுவண்டி"** குருவிடம் பயிலாத எந்த மாணவனும் "குணவானானாலும், காமம், க்ரோதம், மூர்க்க குணம், இம்மூன்றும் அவனால் வெல்ல முடியாத காரியம் உலகில் பந்தபாசம், உற்றார் உறவினர், எல்லோராலும் துன்பம் நேராது காக்கும் அருமருந்து குருவின் அறிவுரையே.

**தெளிவுரை :** கடவுளை அவரவர் விருப்பப்படி வணங்கலாம். ஆனால் மனிதனாகப் பிறந்தவன் ஒவ்வொருவரும் தனக்கென்று குருவை தேர்ந்தெடுத்து அவருடைய நல்லாசியாலும், நல் உபதேசத்தாலும், நல்லவைகளை கற்று, தீயவைகளை விட்டு தியானித்து மோக்ஷமடையலாம். குருகடாக்ஷத்தால் கடவுளே ப்ரத்யக்ஷம் ஆகிறான். குருவின் தெய்வமே சிஷ்யனின் தெய்வமாகி விடுகிறது. குருவைப் பணிந்தால் தானே கடவுள் அனுக்ரஹம் கிடைக்கிறது.

3. **"ஏலநீதயராது"** – நீ ஏன் தயவு காட்ட மாட்டேன் என்கிறாய்? இந்த பராமுகம் ஏன்? சிறிது நேரத்திற்கு முன் உன்னை எனக்கு காண்பித்தாயே ராமா! சர்வ அலங்காரமுடன் கருணை உள்ளங் கொண்டு மீண்டும் எனக்கொருமுறை தரிசனம் தரமாட்டாயா? நீலமேகஸ்யாமளனே! வனமாலை அணிந்தவனே! விஸ்வாமித்திரருக்கு யாகம் காத்தவனே! அரக்கனை அழித்தவனே! தரசத புத்ரா மறுபடியும் எனக்கு தரிசனம் தா.

**தெளிவுரை :** இக்கீர்த்தனத்தின் சிறப்பு ஸ்ரீ த்யாகப்பிரும்மம் ஸ்ரீ ராமநாமத்தை 96 கோடி ஜபித்து முடித்த தினத்தன்று ஸ்ரீ ராமபிரான், லக்ஷ்மணனோடும், விஸ்வாமித்திரனோடும், பளிச்சென்று, அவசரமாக காட்சியளித்து மறைகிறார். பகவானை எதிர்பாராது தரிசித்த ஸ்வாமிகள், ஸ்ரீ ராமனின் திவ்யமங்கள ஸ்வரூபத்தை அவசரத்தில் பார்த்து பரவசமுற்றதை இக்கீர்த்தனத்தில் அம்ருதவர்ஷிணியாக வர்ணித்ததோடல்லாமல் தனக்கு மீண்டும் ஸேவை தரும்படி கேட்கிறார். மேலும் ஸ்ரீ ராமனுடைய திவ்ய ஸ்வரூபத்தையும், அவனுடைய கல்யாண குணங்களையும், பரிவார சிறப்புகளையும் கூறி, அவனே ஸ்ரீ மந் நாராயணனே என்பதையும் கூறுகிறார். அந்த ஸ்ரீ மந் நாராயணனே அவதார புருஷனாக ஸ்ரீ ராமன் என்பதை பரவசமுடன் கூறுகிறார் இக்கீர்த்தனையில்.

4. **"மானமுலேதா"** – நான் உன்னுடையவன் என்று சிறிதும் இரக்கமில்லையா? வாலியின் தம்பியான சுக்ரீவனுக்கு வாலியை கொன்று அரசனாக்கவில்லையா? லவகுசனுக்கு தந்தையான ஸ்ரீ ராமா! என்னிடம் மட்டும் ஏன் இந்த பாரபக்ஷம்? உன்னை நான் மானமுலேதா என்று நிந்திப்பது உனக்கு கோபத்தை உண்டாக்கவில்லை. இந்த நிலையை நான் உன்னிடம் எப்பொழுதும் கண்டதில்லை. சங்கீதப்பிரியனே! உன்னுடையவன் என்று என் மேல் அன்பு கொள்.

**தெளிவுரை :** ஸ்ரீ த்யாகப்பிரும்மம் ஸ்ரீ ராமனிடம் தனக்கு அன்பு காட்டி அடைக்கலம் தரும்படி கேட்கிறார். ஸ்ரீ ராமனது தாமதம் நாதப் பிரும்மத்துக்கு வருத்தத்தை அளிக்கிறது மனம் நொந்து அங்ஙனம் ஸ்ரீ ராமனை அன்பினால் நிந்திக்கிறார்.

